[20th March 1961

அங்கத்தினருக்கும் கூட பொறுப்பு இருக்கிறது என்று எண்ணுகிறேன். கலெக்டருடைய தகவல்களைக் கொண்டு இப்பொழுது விவரங்கள் சொன்னேன்.

**Sri A. VEDARATHNAM** : இதற்கு எவ்வளவு செலவாயிற்று, விழுந்த வீடுகளைப் புதிப்பிக்க என்ன உதவி அளிக்கப்படுகிறது என்று தெரிவிக்க முடியுமா ?

**The Hon. Sri P. KAKKAN** : விழுந்த வீடுகளைப் புதிப்பிக்க ரூ. 3,35,000 கொடுத்திருக்கிறோம் ; லேசாக விழுந்த வீடுகளுக்கு ரூ. 15 வீதமும், பெரும் பகுதி விழுந்து விட்ட வீடுகளுக்கு ரூ. 30 வீதமும் கொடுத்து வருகிறோம்.

*"Bleeding Madras"*

*942 *Q.*—Sri S. M. **ANNAMALAI** : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-ல் பிளீடிங் மதராஸ் துணி இதுவரை எவ்வளவு உற்பத்தி செய்யப்பட்டது ?

(இ) எவ்வளவு ஏற்றுமதி செய்யப்பட்டது ?

The Hon. Sri R. VENKATARAMAN : (*a*) 4,25,000 yards (Four lakhs and twenty-five thousand yards) of Bleeding Madras valued at Rs. 7,44,000 (Rupees seven lakhs and fortyfour thousands) were produced from 1st January 1960 to 31st December 1960.

(*b*) 18,06,002 yards (eighteen lakhs, six thousand and two yards) valued at Rs. 41,70,938 (Rupees forty-one lakhs, seventy thousand, nine hundred and thirty-eight) was exported during 1960. This includes the stock of cloth produced during 1959 also.

*943 *Q.*—Sri V. K. **KOTHANDARAMAN** : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-ல் "பிளீடிங் மதராஸ்" ரகம் கைத்தறித் துணி நமது ராஜ்யத்தில் எவ்வளவு தேங்கிக் கிடக்கிறது ?

(இ) இதனால் ஏற்பட்டுள்ள சிரமத்தைப் போக்க சர்க்கார் எடுத்துக் கொண்ட நடவடிக்கை என்ன ?

(உ) மத்திய சர்க்கார் இதற்காக ஏதாவது உதவி செய்கிறார்களா ?

The Hon. Sri R. VENKATARAMAN : (*a*) About 16,00,000 yards (sixteen lakhs yards) are reported to be the stocks left in this State.

(*b*) & (*c*) With a view to assist the marketing, the Government sponsored a delegation consisting of the Director of Handlooms, representatives of the Madras State Handloom Weavers' Co-operative Society and leading private exporters of handloom cloth to the East Asian countries to explore markets for Bleeding Madras and other varieties of handloom fabrics. The State Society has been advised to make ready-made garments from "Bleeding Madras" to facilitate sales. This Government have also requested the Government of India to purchase the entire accumulated stock of Bleeding Madras through the Handloom Export Organisation. Their decision is awaited.

20th March 1961]

SRI S. M. ANNAMALAI : ஸார் ப்ளீடிங் மெட்ராஸ் ஏற்றுமதி தேக்கத்தால் எவ்வளவு கைத்தறி நெசவாளர்கள் பாதிக்கப் பட்டிருக்கிறார்கள் ? அவர்களுக்கு நிவாரணம் அளிக்க என்ன ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன ?

THE HON. SRI R. VENKATARAMAN : கேட்ட கேள்விக்குப் பதில் கொடுத்தேன். எத்தனை நெசவாளிகள் கஷ்டப்படுகிறார்கள் என்பதில் இரண்டு அபிப்பிராயங்கள் இருக்கின்றன. ஒன்று வியாபாரிகள் அந்தத் துணிகளை வாங்கி வைத்துக்கொண்டு, அவற்றை சர்க்கார் வாங்க வேண்டும் என்று வற்புறுத்துகிறார்கள் என்று ஒரு அபிப்பிராயம். இப்பொழுது நெசவாளர்களிடம் துணி தேங்கியிருக்கிறதா அல்லது வியாபாரிகளிடம் தேங்கியிருக்கிறதா என்று சொல்வதற்கில்லை.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Are the Government aware of the fact that since the quality has gone down, we are not having enough business? What steps have the Government taken to enforce effectively the quality?

THE HON. SRI R. VENKATARAMAN : So far as cloth produced under co-operatives and under the direction of Handloom Export Organisation are concerned, the quality is of standard mark and there is no loss of the export of this cloth. But so far as private producers are concerned, there has been the entry of people who were not engaged in this trade before. Therefore there has been certain amount of deterioration in the standard of goods produced by them. It is not possible for Government to insist on quality unless the foreign buyers also co-operate with Government. We have advised all foreign buyers that they should accept goods from the Handloom Export Organisation or alternatively they must accept goods only marked by State Government under the Cloth Marking Scheme. But in spite of this, foreign buyers do buy from other people, and they take the risk.

SRI V. K. KOTHANDARAMAN : ப்ளீடிங் மெட்ராஸ் துணி என்று சொன்னால் அந்தத் துணியிலிருந்து சாயம் ப்ளீடாகிக்கொண்டிருப்பதற்குப் பெயரா ? வருஷக் கணக்கில் அதை வாங்கி ஏற்றுமதி செய்யவில்லை என்றால் பூச்சி அடித்து மக்கிபோய், ப்ளீட் ஆகக்கூடிய நிலைமை ஏற்பட்டு, அதனால் நஷ்டம் ஏற்படக்கூடிய அளவுக்குப் போய்விடுகின்றது ஆகையால் உடனடியாக அவைகளை வாங்கி ஏற்றுமதி செய்வதற்குத் தகுந்த நடவடிக்கை எடுக்கப்படுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : யார் யார் எந்த எந்தப் பண்டங்களை உற்பத்தி செய்தாலும் அதை வாங்கி சர்க்கார் ஏற்றுமதி செய்யவேண்டுமென்ற கொள்கையை இந்தச் சர்க்கார் ஏற்றுக் கொள்ளவில்லை. சர்க்கார் குறிப்பிட்ட ரகத் துணியை உற்பத்தி செய்தால் அதை வாங்குவதற்குத் தயாராய் இருக்கிறது. மற்றவர்கள் தவறான முறையில் தவறான துணிகளை உற்பத்தி செய்துவிட்டால் அதன் லாப நஷ்டப் பொறுப்பு அவர்களையேதான் சார்ந்தது. சர்க்கார் பொறுப்பேற்க முடியாது.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Sir, if this is allowed, will it not affect the quality . . . .

(Hon. Member Sri N. K. Palanisami was heard to say something from his seat.)

[20th March 1961

Mr. SPEAKER : Will the hon. member, Sri Ramaswamy Mudaliyar resume his seat for a while. If hon. member, Sri N. K. Palanisami has got to say something, he will have to rise from his seat on a point of order and say what he wishes to state and it is not in order for him to murmur from his seat.

Sri N. K. PALANISAMI : In spite of my attempts to put supplementary questions, you never allow me to put a supplementary. What is the use? If you persist in this, I will walk out from the House in protest.

Mr. SPEAKER : I have no objection to the hon. Member walking out from the House as a protest. Unless the hon. Member catches my eye, how can I call him to put a supplementary? All over the world, Members have most often been unsuccessful in catching the eye of the Chair to put supplementaries? I may again state that I have no objection to the hon. Member walking out from the House.

Sri V. K. RAMASWAMY MUDALIYAR : In view of the fact that it will affect the good quality of the cloth, will the Government advise the Export Organisation to prevail upon the foreign Governments to purchase more?

The Hon. Sri R. VENKATARAMAN : Actually, all the goods sent through the Handloom Export Organization are of good quality and we have not received any complaints about them. But, it is only some speculators both in the United States and in India who thought that there was a phenomenon market for "Bleeding Madras" in America, started to speculate buying all sorts of cloth not answering to the description of "Bleeding Madras". That is why all this trouble has arisen.

Sri S. M. ANNAMALAI : அமைச்சர் அவர்கள் பதில் சொல்கிறபோது தரக் கட்டுப்பாடு செய்த துணிகளை வெளிநாட்டு வியாபாரிகள் வாங்கினால் பரவாயில்லை. தரக்கட்டுப்பாடற்ற துணியை வாங்கினால் அதனால் வரக்கூடிய லாபநஷ்ட பொறுப்பை அவரவர்களே ஏற்றுக் கொள்ளவேண்டும், சர்க்கார் ஏற்காது என்றார்கள். ஏன் இங்கிருந்து ஏற்றுமதி செய்வதற்கு லைசென்சு கொடுக்கிறபோது மற்றவர்களுக்கு கொடுக்காமல் இந்த ஸ்தாபனத்தின் மூலமே ஏற்றுமதிசெய்ய முயற்சிக்ககூடாது ?

The Hon. Sri R. VENKATARAMAN : ஒரு ஸ்தாபனம் ஏற்றுமதி செய்யலாம். மற்றவை செய்யக்கூடாது என்று தடுப்பது சட்டப்படி எவ்வளவு தூரம் செல்லும் என்று எனக்குத் தெரியாது.

Mr. SPEAKER : Now, I want to make the position clear again. It is not possible to allow all hon. Members to put supplementary questions on all questions. The practice that we have been following here is this. Hon. Members who have given notice of the main question are given chance to put two supplementary questions on the main question and the rest is distributed among the other hon. Members. For instance, in this case, hon. Members Sri Annamalai and Sri Kothandaraman have put the question and they were allowed to put supplementaries. The hon. Leader of the Opposition has got a right to be given favourable consideration in this respect. Therefore, an hon. Member who has not

20th March 1961]

given notice of a question may or may not get a chance to put a supplementary question. It all depends upon whether he catches the eye of the Chair and the Chair also considers that he can be given a chance.

Sri K. B. S. MANI : இம்மாதிரி ஏற்றுமதிக்கு லாயக்கில்லாத துணிகளை உற்பத்தி செய்துவிட்டு, அதைச் சர்க்கார் வாங்கிக்கொள்ளவேண்டும் என்று நிர்ப்பந்தப்படுத்துவதும், அதற்காக டெபுடேஷன் வருவதையுமே தொழிலாகக் கொண்டு விட்டதனால் இதைத்தடுக்க தரக்குறைவான துணிகளை உற்பத்திசெய்தால் அதன் நஷ்டத்திற்கு அவர்களே பொறுப்பாளி என்று சர்க்கார் விளம்பரப்படுத்தும் முறையில் ஒரு அறிக்கை கொடுப்பார்களா ?

The Hon. Sri R. VENKATARAMAN : அந்த விதமான அறிக்கை கொடுக்கத் தேவையில்லை. இந்த நாட்டில் உள்ள ஒவ்வொரு பிரஜைக்கும் சர்க்கார் டிரேட் மொனாபலைஸ் செய்யவில்லை என்பது தெரியும்.

Mr. SPEAKER : Hon. Member Sri N. K. Palanisami.

Sri N. K. PALANISAMI : I am not putting a supplementary, Sir.

Mr. SPEAKER : All right. Hon. Member Sri Vinayakam.

Sri K. VINAYAKAM : May I know the peculiar features of this "Bleeding Madras" which has created a strange taste in foreign countries, especially in America? Will it not be possible to create such a taste in the interior market?

The Hon. Sri R. VENKATARAMAN : Fashion is a matter of taste. If hon. Members make it a point to wear Bleeding Madras bush shirts on one of these days, I am quite sure, they will create a popular demand for it. But, what we find here is that people want others to wear these while they do not want to do it.

Sri V. K. KOTHANDARAMAN : கைத்தறி நெசவுத் தொழிலாளர்களையும், கைத்தறித் துணியையும் பாதுகாக்க வேண்டுமென்பது சர்க்காரின் பிரதான நோக்கம். அது நிறைவேறவேண்டுமானால் நமது கைத்தறித் தொழிலாளர்கள் உற்பத்தி செய்யும்படியான துணிகளை ஸ்டேட் ஹாண்டு லூம் ஸ்தாபனத்தின் மூலமாகவோ, வேறு முறையிலோ வாங்கி ஏற்றுமதி செய்வதற்கு சர்க்கார் முயற்சி செய்வார்களா ?

The Hon. Sri R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் கேட்ட கேள்வியின் முன் பகுதியை ஏற்றுக்கொள்வதற்கில்லை. எந்தவிதமான துணியை யார் உற்பத்தி செய்தாலும் அதை வாங்கி, விற்றுக் கொடுத்தாக வேண்டும் என்று சொல்வது சரியல்ல.

Sri S. RANGANATHA MUDALIAR : Will it be consistent with the decorum of the House if hon. Members come to this House dressed in "Bleeding Madras"?

The Hon. Sri R. VENKATARAMAN : I did not say that they should come to the House with those bush shirts. I only said that they should wear those shirts. They could wear them in the evenings.

[20th March 1961

*Housing Schemes (Koothapalli)*

MR. SPEAKER: As the hon. Member who gave notice of question No. 944 is not in his seat, the question and answer will be printed in the proceedings of the Assembly.

* 944 *Q.*—SRI T. S. RAMASWAMY: Will the Hon. the Minister for Local Administration be pleased to state the details of the Village Remodelling Scheme of Koothapalli in Tirunelveli with special reference to—

(i) the number of houses sanctioned;

(ii) the amount sanctioned;

(iii) contribution by the villagers;

(iv) the date of sanction; and

(v) the progress made so far?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: (i) to (v) Koothapalli village lies in the Valliyur Community Development Block area. There are 395 families in the village with a population of 1,925. The extent of the existing village is 20 acres. The Project for the village seeks to re-model it by providing amenities in accordance with the masterplan prepared by the Rural Housing Cell. Loans amounting to Rs. 2.92 lakhs have been sanctioned during the months of June, July, August and December 1960 for the construction/improvement of 349 houses.

The contribution of the villagers towards the Project will be in the form of labour and materials to the extent of $33\frac{1}{3}$ per cent of the cost in each case. The houses are in various stages of construction.

*Iron (quota)*

* 945 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR: Will the Hon. the Minister for Industires be pleased to state the quantity of iron allotted to the Madras State during the last quarter for (1) agricultural purposes, (2) domestic purposes and (3) industrial purposes?

THE HON. SRI R. VENKATARAMAN: Allotment is made for each half year, i.e., from April to September and from October to March, and not for each quarter. The quality of iron and steel allotted during the first half year of 1960-61 in respect of agricultural, domestic and industrial purposes is as follows :—

| | |
|---|---|
| Agricultural purposes ... ... ... | * 5,447 tons. |
| Domestic purposes ... ... ... | 11,485 ,, |
| Industrial purposes ... ... ... | 7,850 ,, |

* Does not include 1,168 tons of non-standard and T.C.M. materials received.